18th March 1961]

*Conciliation and Rent Courts (Cases)*

*916 Q.—SRI P. ARASAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா ? 9–10 a.m.

(அ) 1960–61-ல் சிதம்பரம் தாலுகாவில் வாரம்தாரர்கள், குத்தகை தாரர்கள், நிலச் சுவான்தாரர்கள் இவர்களிடையே ஏற்பட்ட வாரம், குத்தகை சம்பந்தமாக எத்தனை தகராறுகள் சமரச கோர்ட்டுக்கும், ரெண்ட் (Rent) கோர்ட்டுக்கும் வந்துள்ளன ?

(இ) அவைகளில் எத்தனை கேஸ்கள் முடிவடைந்தன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (இ) During the period from 1st January 1960 to 21st February 1961, 132 cases were filed under the Tanjore Pannaiyal Protection Act, 1952 and the Madras Cultivating Tenants (Payment of Fair Rent) Act, 1956, of which 39 were disposed of by 21st February 1961.

*Survey Computor Draftsmen (pay)*

* 917 Q.—SRI V. K. KOTHANDARAMAN : SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the Government have received a Memorandum, dated 5th August 1960 from the Tamilnad Survey Computor Draftsmen Union (Central), Madurai, regarding the pay scales of temporary subordinates; and

(b) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The matter is under consideration.

*X-Ray units*

* 918 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) 1960-ல் சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் எத்தனை எக்ஸ்ரே கருவிகள் உள்ளன ஜில்லாவாரியாக ?

(இ) அவைகளை பழுதுபார்க்க எத்தனை நிபுணர்கள் இருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) A statement * is placed on the table of the House.

(b) Five, Sir.

SRI V. K. KOTHANDARAMAN: நம் ராஜ்யத்திலே 114 எக்ஸ்ரே கருவிகள் இருக்கின்றன. அவற்றைப் பழுது பார்க்க ஐந்து பேர்கள் இருந்தால் உண்மையிலேயே மாதக் கணக்கில் பழுது பார்க்க முடியாமற் போகும் நிலைதான் ஏற்படுகிறது ; அதனால் நோயாளிகள் பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே பழுது பார்க்கும் அதிகாரிகளை அதிகப்படுத்த முயற்சிகள் எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஐந்து பேர்கள் ரீஜனல் பேஸிஸில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் எந்தெந்த இடத்தில் தேவையோ அங்கு சென்று பழுது பார்ப்பார்கள். இம்மாதிரி அதிகாரிகள் போதாமல் வேலை செய்யவில்லை என்ற தகவல் என்னிடம் இல்லை.

---

* Printed as Appendix IV on page 91 infra.